2nd March 1961]

THE HON. SRI R. VENKATARAMAN : தொழிலை நடத்தலாம். யாரும் வேண்டாமென்று சொல்லவில்லை. ஒருவரும் இந்தத் தொழிலை நடத்த முன்வரவில்லை. சர்க்கார் எடுத்து நடத்தக்கூடிய நிலைமையில் இல்லை. யார் நடத்த முன்வந்தாலும், சர்க்கார் வேண்டிய உதவி செய்யும்.

SRI S. RAMALINGA PADAYACHI : உடையார்பாளையம், பெரம்பலூர் தாலூக்காக்கள் மிகவும் பிற்பட்ட பகுதிகள் என்பது தெரியும். சுற்றுப்பிரயாணம் செய்யும்பொழுது அங்கே தொழில் அமைச்சர் அவர்கள் வருவது இல்லை. ஆகவே அந்தப் பகுதி மக்கள் முன்னேறுவதற்கு அரசாங்கமே இந்தத் தொழிலை ஏன் எடுத்து நடத்தக்கூடாது?

THE HON. SRI R. VENKATARAMAN : நான் மீண்டும் சொல்ல விரும்புகிறேன். சர்க்காரே தொழிலை நேரிடையாகச் செய்வதான கொள்கை இல்லை. தனியார் யாராவது நடத்த முன் வந்தால், பண உதவி, இதர உதவி எல்லாம் கொடுக்க முடியும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : இந்தக் கற்கள் திருச்சி ஜில்லாவிலே பழூர் பிர்க்காவிலே ஏராளமாக 25 மைல் சுற்றளவுக்கு கிடைத்து சுண்ணாம்புக் காளவாய்கள் நடத்தப்பட்டு வருகின்றன. இந்தக் கற்களைச் சேர்த்து ஒரு தொழிலை அமைப்பதற்கு நடவடிக்கை எடுத்தால் நல்ல முறையில் பயன் பெறும். லாபகரமான முன்னேற்றமும் காணமுடியும். ஆகவே இதை ஸ்பெஷலாகப் பரிசிலனை செய்வதற்கு அரசாங்கம் முன்வருமா?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்பொழுதுதான் நான் சொன்னேன். இதை உபயோகிப்பதற்கு யார் முன்வந்தாலும் சர்க்கார் லைசென்சு கொடுத்து, எல்லா வசதிகளையும் செய்து கொடுக்க முடியுமென்றும், சர்க்காரே நடத்த இயலாது என்பதையும் தெரிவித்துக்கொண்டேன். தொழில் செய்ய முன்வரக் கூடியவர்கள், அதாவது தனியார் யாராக இருந்தாலும், பொறுப்பு எடுத்துக்கொண்டு நடத்த முன்வரலாம்.

*Transport Workers*

* 506 Q.—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state with reference to the answer given in the Legislative Assembly Question No. 544 on 24th March 1960—

(a) whether the investigation has been completed; and

(b) if so, the result thereof and the action taken thereon?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) The enquiry into the affairs of the Madras State Transport Department Employees' Co-operative Thrift and Credit Society has not yet been completed.

(b) Does not arise.

[2nd March 1961

SRI A. GOVINDASAMI : பஸ்களில் வேலைசெய்யக்கூடிய தொழிலாளரிடமிருந்து வீடுகட்டுவதற்காக எவ்வளவு பணம் வசூலிக்கப்பட்டது ? அந்தத் தொகை இப்பொழுது யாரிடமிருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : இது கோவாப்பரேடிவ் கிரெடிட் சொசைடி சம்பந்தமான கேள்வி. அங்கத்தினர் கேட்பது வேறு விஷயம். தனியாகக் கேள்வி போட்டால் புள்ளி விவரங்கள் கொடுக்கப்படும்.

SRI K. VINAYAKAM : May I know the amount that is supposed to have been mishandled or defalcated in this society?

THE HON. SRI R. VENKATARAMAN : This is exactly what is under investigation. It has been preliminarily estimated that a sum of Rs. 33,000 has not been properly accounted. Perhaps all the amount might not be misappropriated because accounts may be missing for a few items. That is being investigated now.

*Industrial Estates*

* 507 Q.—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the number of Industrial Estates in the State;

(*b*) the number occupied; and

(*c*) the number and the place where industrial production has been started?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Eight.

(*b*) Seven.

(*c*) Production has been started in seven Industrial Estates, namely, at Guindy, Virudhunagar, Madurai, Erode, Tiruchirappalli, Pettai and Marthandam.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : சேலத்திலே ஒரு தொழிற்பேட்டை ஏற்படுத்துவதாக இருந்ததே. எப்பொழுது ஏற்படுத்தப்படும் ? தாமதத்திற்கான காரணம் என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : 1960-ம் வருஷத்திலே தான் அது சாங்ஷன் ஆயிற்று. எந்த இடத்தில் வைக்கலாமென்று இப்பொழுது நிலம் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். முதலில் ஒரு இடத்தை அவர்கள் தேர்ந்தெடுத்தார்கள். அது சரியாக இல்லை. ஆகவே இப்பொழுது வேறு ஒரு இடத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

SRI A. A. RASHEED : May I know the reason for the non-occupation of the eigth industrial estate?

THE HON. SRI R. VENKATARAMAN : It has been completed only two months back.